83

இளிநகை வசையும் வரியிய லென்ப.

84

காலது பின்னிக் கையது பின்னி
மேலது குன்றி நூலிடை யொன்றி
சாய்ப்பு முறுக்கிக் கோப்புக் குறுக்கி
முட்டுக் கிறுக்கி முடை யிறுக்கிக்
கட்டு விறுக்கிக் காட்டல் நகைப்பே.

85

இருவ ரிணங்கிய யிளிவரி சிலவாம்.

86

கோலுடைத் தலையும் வேய்புரித் துகிலும்
கொண்டோ ராணும் பெண்ணுங் குழைக்கும்
கூத்தோ ரிளிவுக் கூத்தே யென்ப.

87

ஒருவர்மே லொருவ ரிருவரு மொன்றி
ஒருவரா யாடு மொட்டொரு வசையே.

88

முதுகுடன் முதுகு பதிவுறக் கட்டி
ஒருடை தொங்க லிருடல் சுற்ற
நான்குகை கால்கொளும் நட்டமோர் வசையே.

89

முன்னதி லாண்பெண் முரணோர் வசையே,

90

ஒருவர் கைமற் றொருவர் காலாய்
ஒருவர் கடிமே லுயரமற் றொருவர்
இருதலை யிணைக்கு மியல்பொரு வசையே.

91

ஒன்றினி லொன்று யுடலுங் காலும்
தலையும் மறையத் தழைதல் வசையே.

## 92

சாரிகை வரியே சாரிகை யென்ப,

## 93

ஒருவர்மே லொருவ ருழன்றெல் லோரும்
படிப்படி யேறி நடிப்பது சாரிகை.

## 94

திறனுறு வரியே திறன்வரி யென்ப.

## 95

பந்தாச் செண்டாப் பாவைய ராகக்
கொப்பந்தட் டதுவே திறனுறு கோப்பு.

## 96

சுற்றிச் சுழற்றல் சுரிகைக் கூத்தே.

## 97

காலினைப் பற்றியோ கையினைப் பற்றியோ
ஒருகா லொருகை யுடன்பா டுற்றுரு
ஒருகா லொருகை தனிப்பா டுற்றுரு
கழுத்தகக் காலோ காலக நூலோ
என்னப் பலவகை யியல்பினிற் பற்றி
ஒருத்த னொருத்தியைச் சுழற்றுதல் சுரிகை.

## 98

பாவைக் கூத்தும் வரியுட் படுமே.

## 99

தோலுறு பாவை துளைமரப் பாவை
ஆலு மிரண்டும் பாவையி னட்டம்.

## 100

இசைவசை யெல்லா மிசையுட னுமே.

## 101

இன்னு ரன்ன வரியென் னிலவாம்
உற்றது கண்டு மற்றது தேர்க.

*பயன்*

102

அறம்பொரு ளின்பம் வீடென நான்கும்
திறம்பட நாட்டியச் செயலின் பயனே.

103

அறமது திறலே மற்றதன் வழியே.

104

பொருளது விறலே மற்றவை புணர்ப்பு.

105

இன்பே காமம் மற்றவை யிழைவு.

106

வீடது நாட்டிய வினையகல் கூத்து.

107

அடிமுதல் பூசை யறவழி யாமே.

108

புறத்திணைக் கூத்துப் பொருளின் விறலே.

109

அகத்திணைக் கூத்தே யின்பத் தாக்கம்.

110

ஈற்றுப் பூசை வீட்டிய லாமே.

111

அவனவ ளாட்ட மதுவே வீடு.

*சீர்*

112

கூத்தவி நயமே கூத்தன் கூத்தி.

113

கூத்து முழுதுணர் கூத்தன் மாநடன்.

## 114

கூத்து முழுதுணர் கூத்தி மாநடி.

## 115

கூத்தைப் படைப்போன் நான்முகக் கூத்தன்.

## 116

கூத்தைப் படைப்போள் கூத்தக் கலைமகள்

## 117

கூத்தில் நுணுக்கம் கோப்போன் சிவனே.

## 118

கூத்தில் நுணுக்கம் கோப்போள் பரையே.

## 119

கூத்தையே யன்பின் கோப்பாக் கொண்டு
கூத்துடை யானைக கூடலு மாமே.

# கிளை நூல்

## முளைக்கூறு

1

கிளைநெறி கிளத்தும் கிளைக்கிளை நூலே.

2

கிளைமுன் றென்னக் கிளத்தினர் முன்னோர்.

3

முக்கிளை யுறுப்பும் முப்பத் தாறே.

4

அடியே விறலே புறமே குதியே
கணையே கடையே சிமிழே துடையே
எனுமெண்' வகைத்தே கீழ்க்கிளை யென்ப.

5

பாட்டிடை 'வயிறு மார்புதோள் வெந்தலை
கைக்குழி பிற்கை முழங்கை முற்கை
கணையக மீரறு கணைநடுக் கிளையே.

6

கழுத்துத் தாவாய் கன்னம் கனிவாய்
நாக்கிதழ் வெண்பல் மூக்குடன் கண்கள்
கண்விழி கண்ணிமை கண்வரை காது
குழல்நுதல் முகமீ ரெட்டுமேற் கிளையே.

7

தலைகை யிடைதாள் தாமிவை முதலே,

8

மற்றவை சார்பென வழங்கினர் முன்னோர்.

9

கணைக்கிளை யுறுப்புறும் தொழில்கிளத் துவமே.

## கீழ்க்கிளை

10

காலடிக் கணைகடை முழந்துடை யைந்தே.

11

அடியடிப் புறங்குதி விரலென நாலே.

## அடி

12

அடிப்படி யிடியெடி மடிக்கொடி பலவே.

## புறம்

13

அடிச்சரி புறக்கா லடைவென் மனரே.

14

அடிப்புறம் அடக்கல் அடிப்புற மென்ப.

15

அடிப்புறங் குறுக்க லணைக்கோ லென்ப.

16

புறம்புறம் பொக்கல் பொக்கமென் மனரே.

17

புறப்புறக் கோடுறல் புறக்கோ டென்ப.

18

அகக்கோ டதுபுறத் தடைவகக் கோடே.

## விரல்

19

பன்னிரு வகைத்தே கால்விரற் பரவை.

20

அடிப்படி விரற்றூக் கதுவிரற் றூக்கே.

21

அடிக்குழி விரல்நடு வதுவிரல் நாற்று.

22

விரல்முன் மடிவது விரல்மடி யென்ப.

23

விரலிணைப் பெருவிரல் மேவுதல் மெப்பு.

24

விரலிணைப் பெருவிரல் மேலுறல் நொப்பு.

25

விரல்மிசை நெரிதல் விரல்நெரி யென்ப.

26

பெருவிரல் நட்டு மறுவிரல் விட்டு
நெரிநெரி நெளிதல் விரற்சிரை யாமே.

27

நெடுவிரல் நெட்டு நெரிவது நெட்டே.

28

பெருவிரல் நெடுவிரல் பின்னமற் றவையே
மறிவுற நெரிதல் மரட்டெடன் மனரே.

29

நெடுவிரற் பெருவிரல் நடுவுறத் தவ்வி
தட்டுதல் பிடித்தல் தகைத்தல் தவ்வம்.

30

விரல்நுனிச் சுட்டி வீக்குத லூசி

31

விரல்விரல் கவ்வல் விரற்பிடி யென்ப.

32

தூக்கது பேது, நாற்றது நாட்டம்,
விரல்மடி விறுக்கம், மெப்பது மேப்பம்
நொப்பது மயக்கம், விரல்நெறி யாட்டம்.

33

விரற்சிறை மன்னே, நெட்டது யோகம்,
மாட்டது மாட்சி, தவ்வ துடும்பம்,
ஊசிதல் வீரம், விரற்பிடி யிச்சை,
இசைவவி ரறல்விற லென்மனுர் முனிவர்.

## குதி

34

வீக்கல் விறுங்கல் வெடைத்தல் குதியே.

35

குதிக்குதி நெருட்டல் குதிக்குதி யென்ப.

## கணைக்கால்

36

சுருங்கல் விறுங்கம் துவளல் துள்ளல்
வெடைக்கல் விறுக்கல் விணையறு வகையே
கணைக்காற் சென்ப கற்றுணர்ந் தோரே.

37

கணைக்கணை நெருடல் கணைநெருட் டென்ப.

## கடைக்கால்

38

வீக்கல் விலுக்கல் விறுக்கித் தசையொடு
ஊக்கல் உலுக்கல் கடைக்காற் குரித்தே.

## முழங்கால்

39

அடக்கல் மடக்கல் முடக்கல் வெடக்கல்
துள்ளல் துவளல் முழங்காற் றெழிலே.

## துடை

40

தொங்கல் துவளல் துள்ளல் துடுக்கல்
தோய்தல் துளேதல் தூக்கல் துடையே.

## கால் நெறி

41

நிலயலே யெனவிரு நெறியது காலே.

42

பொருத்தம் தூக்கு விருத்தம் கால்வகை.

43

பொருத்தம் நிலயே விருத்தம் அலேயே.

44

தூக்கிரு பாலும் தொடரும் பொதுவே.

## நிலேக்கால்

45

நிலேக்கா லடியே நிற்கும் நிலேயே.

46

காலடிக் கால்வகைக் கணக்கிலும் வருமே.

## பொருத்தம்

47

பொருத்தம் சமனே திரிகை மாற்றே.

48

சரிகை விரிகைக் கீற்றது சமனே.

49

சரிகை யீரடிச் சமநிலே யென்ப.

50

விரிகைக் குதியுறு விரலக விரிவு.

51

கீற்றெதி ரெதிரடிக் குதியுறு கீற்று.

## திரிகை

52

திரிகைத் திரிகைத் திரிகைக் கீற்றே.

53

திரிகை விரலுறு குதியக விரிவு.

54

திரிகைக் கீற்றிடல் திரிகைக் கீற்றே.

## மாற்று

55

மாற்றே மாற்றே மாற்றுறு விரியே
குதிவிரல் மாற்றே கணைவரிக் கீற்றே
விரற்குதி நேரிசை நிரையசை யொட்டே
யெனுமெழு வகைத்தே என்மனுர் புலவர்.

56

மாற்றது சிறுவிரல் பொருத்துற மறிதல்.

57

மாற்றினை விரித்தல் மாற்றுறு விரியே.

58

குதிக்குதி விரல்விரற் கொள்வது குதிவிரல்.

59

கணைவிழிக் கணைவிழிக் கவ்வல் கணைவரி.

60

விரல்முன் குதிநேர் விரற்குதி நேரிசை.

61

விரற்குதி நிறைதல் விரற்குதி நிரையே.

62

விரற்குதி நெட்டளே நெட்டுதை லொட்டே.

63

மாற்றிடம் வலமென வீரிரு வகைத்தே.

## தாக்கு

64

அரைத்துக் ககம்புற மாமிரண் டென்ப.

65

பெருவிரற் கோடுறும் பேதக மென்ப.

66

சிறுவிரற் கோட்டி லடிநிமிர் வதுபுறம்.

67

சரிகை விரிகை திரிகை மாற்று
மாற்றுறு விரிகை மாற்றுறு திரிகை
ஆறும் அரைத்தூக் கதற்கும் வருமே.

68

தூக்கரைத் திரிகை வசைமிசைத் துவளும்.

69

தூக்கது விரற்றூக் குடன்குதித் தூக்கே.

70

சரிகை விரிகை திரிகை கீற்று
மாற்றே மாற்றுறு திரிகை விரிகை
எனுமெழு வகைத்தே விரல்நுனித் தூக்கு.

71

விரல்நுனி யெப்படி யப்படிக் குதிநுனி.

72

ஒருகாற் கொன்றுமற் றொருகாற் கொன்றென
பொருத்தமும் தூக்கும் பொருத்துபு பொருத்தம்.

73

பொருத்தத் தூக்கது நிலைகாற் பொக்கம்.

## விருத்தம்

74

நிலையலை யலையென நிகழ்வது விருத்தம்.

## நிலையலை

75

நிலைகா லலைகால் நெறிநிலை யலையே.

76

அச்சென நிலைக்கா லமர்ந்திட மறுகால்
தரையகம் தழுவித் தூக்குடன் தவழ
நிலைபெயர்ந் திடுதல் நிலையலை விருத்தம்.

## அலை நிலை

77

அலைக்கால் நிலைக்கால் அதன்மே லலச
அலைநிலைக் காலென் ருய்ந்திசி னேரே.

78

நிலைக்காற் றுள்ளவை நிலையலைக் குளவே.

## அடி அடைவு

79

நிங்நிலை நிலையலைக் கருநிகழ்த் துவமே.

80

சரிகை நடுநிலைச் சுவையைச் சருவும்.

81

ஆண்பாற் றெய்வ மலைமயுமந் நெறியே.

82

பெண்பாற் றெய்வச் சரிகையின் பெட்சி
ஒருகால் வரைப்பி லுடலக மிறுக்கி
மறுகால் தழைய வார்த்திட லென்ப.

83

விரிகை இரக்க வியப்பில் விளங்கும்.

84

அம்மைத் தேவெலா மார்ந்திடும் விரியே
அவர்கா லிடவலம் வரமுடன் காப்பே.

85

கீற்றது யோகக் கீற்றே யென்ப.

86

சிவன்முய லகன்கால் சேர்வதிந் நெறியே.

87

திரிகை மாற்றது வெறியின் திறலே.

88

சூரைத்தே காலதித் துறையைத் தழுவும்.

89

அரைத்தூக் கதுவசை நோய்மயக் கடையும்.

90

தவ்வையின் வண்ணம் தாள்கொளு மென்ப.

91

குதித்தூக் கதுவே வீரக் குதிப்பு.

92

இராமன் விற்பிடி முன்கா லிணையே.

93

விரற்றூக் கதுவே வியப்புத் தெப்பம்.

94

பகீரதன் கங்கை பாய்தவ மிணைய.

95

நிலையலை விருத்தம் கூத்தின் நிணையம்.

## அலை விருத்தம்

96

பொருத்தமும் தூக்கும் பொருத்துபு பொருத்தித்
தரையக மொட்டியுந் தட்டியும் தாக்கி
வளிவிசைத் திட்டும் வாங்கியும் வீங்கு
மடித்தும் நொடித்தும் எடுத்தும் விடுத்தும்
பெயர்த லலையெனும் விருத்தப் பெயர்ச்சி.

97

சரிசச் சரிமச் சரிதாக் குரிதாப்
புலிவிச் சுளிமீச் சுரியேழ் விருத்தே.

## சரி

98

தரையகம் சருவிச் சரிவது சரியே.

99

எழுவகை யாக இயலுஞ் சரியே.

100

தரையடிச் சருவல் தாட்சரி யென்ப.

101

விரலுற விரைதல் விரற்சரி யென்ப.

102

குதியுறக் குறுகல் குதிச்சரி யென்ப.

103

புறக்கோ டுறுதல் புறச்சரி யென்ப.

104

அகக்கோ டுறுத லகச்சரி யென்ப.

105

குதிநடைக் கீற்றே குதிக்கீற் றென்ப.

106

விரலுறு கீற்றே விரற்கீற் றென்ப.

107

இன்னணம் ஏழும் இயங்கும் காலை
ஒருகாற் கொருகால் ஒவ்வுதல் ஒவ்வம்.

108

ஒவ்வுத லறியா வெவ்வுதல் வெவ்வம்.

சரி நெறி

109

நேர்நேர்க் காற்கால் நெறிதல் நேர்க்கால்.

110

நேர்நிரை நெறிதல் நேர்நிரைக் காலே.

111

நெட்டம் தொட்டம் நெடுதொடுக் காலே.

112

தொட்டம் நெட்டம் தொடுநெடுக் காலே.

113

மாற்றினில் மறிதல் மாற்றுச் சாரிகை.

114

கீற்றினிற் கீக்கல் கீக்கென் பனரே.

115

அலைக்கால் நிலைக்கா லடுக்குறு லெடுக்கே.

116

ஏழ்வகைச் சரிபு மேழேழ் வகையில்
ஏழிரு நெறியா யியங்குறு மென்ப.

117

அடிமிசைச் சரிச்சரிப் பொருத்தமும் தூக்கும்
படிமிசைப் பெயரும் பண்பிற் றென்ப.

சச்சரி

118

அடியெடுத் திடுநடை யதுசச் சரியே.

119

ஊன்றுகால் நான்றி நான்றுகா நான்றி
ஒன்றுபின் ஞென்ரு யுறுஞ்சச் சரியே.

120

முன்னோர் நீட்டல் முன்னோர்ச் சச்சரி.

121

பின்னோர் வாங்கல் பின்னோர்ச் சச்சரி.

122

உண்முகங் குறுக்க லுட்சச் சரியே.

123

விரிமுகம் விறுக்கல் வெளிச்சச் சரியே.

124

வலமுற வார்த்தல் வலச்சச் சரியே.

125

இடமுற இயக்கல் இடச்சச் சரியே.

126

வட்டமிட் டார்தல் வட்டச் சச்சரி.

127

மாற்றுற மறிதல் மாற்றுச் சச்சரி.

128

கீற்றுறக் கிறுக்கல் கீற்றுச் சச்சரி.

129

பொருத்தமும் தூக்கும் பொருத்துபு பொருத்தி
விருத்தச் சச்சரி வினைப்படு மெண்ப.

130

சச்சரிப் போக்கடிச் சார்புநெட் டூசி.

131

சச்சரி முன்பின் சருவுங் காலே
இடக்கையிட் டிணைக்கை யிணைப்பிறை யிணையும்.

132

அடிச்சச் சரியிற் கடிக்குச் சரியே.

133

ஒன்பான் சச்சரி யொன்பா னெண்பான்
ஒருகாற் கொருகா லோரிணை யீரிணை
முப்பான் சரியுறு முறைமுறை முயப்பே.

மச்சரி

134

மடக்குறு காலே மச்சரி யென்ப.

135

ஒருகா லிருகா லுறுமச் சரியே.

136

நிலையலே மச்சரி நிகழ்த்துவம் முன்னே.

137

கணைவரை மடங்கல் கணைமச் சரியே.

138

கடைநடுக் கதுவல் கடைமச் சரியே.

139

இடைவரை யிறுக்கல் இடைமச் சரியே.

140

தடமுற மடக்கல் தடமச் சரியே.

141

எனுமறு வகைத்தே முன்முக மச்சரி.

142

மறிமறிக் கார்கால் மச்சரி சச்சரி.

## பின்முக மச்சரி

### 143

பின்னுற மடக்கல் பின்முக மச்சரி.

### 144

முழம்முழம் நெட்டல் முழப்பின் முகமே.

### 145

அங்நெட்டிற் றுடையது நேர்வது துடையே.

### 146

பாடுறப் பாவல் படிப்பின் முகமே.

### 147

மேலுறு பின்முகம் மேற்கா ரணத்தே.

### 148

எனமு வகைத்தே பின்முக மச்சரி.

## இடவல மச்சரி

### 149

இடவல மச்சரி யியல்புரைப் பம்மே.

### 150

முன்னன கொள்ளும் முறையிட வலமே.

### 151

குத்துதல் குடைதல் கூறிட வலமே.

### 152

கணைவிரல், கடைவிரல், முழுவிரல், முழுமுழம்,
துடைவிரல், அடைவிரி, இடைநேர், இடைமறி,
இடைநுதி யெனவொன் பானிட வலமே.

### 153

கணைவிழிக் கணைக்கோல் புடைக்கால் கறுவிய
தவ்வம் கணைவிரற் றழைவென் மனரே.

154

கணைவிர லென்னக் கடையகம் கடைவிரல்.

155

முழமிணை யதுபெறல் முழவிர லாமே.

156

துடையிணை யதுபெறல் துடைவிர லென்ப.

157

முழுமுழ. நேரக் கடையகல் முழமுழம்.

158

துடைதுடை யளவிரி துடைவிரி யென்ப.

159

இடைநேர்க் கீற்றி விடைக்கீற் றென்ப.

160

இடைநேர் மறிதல் இடைமறுக் கென்ப.

161

தடமளைத் தரம்பல் தடையமென் மனரே.

162

இன்னண மீரோன் பானிட வலமே.

## உண்மச்சரி

163

இனியுண் மச்சரி யியலுரைப் பம்மே.

164

ஒருகாற் கொருகா லூண்டுண் மச்சரி.

165

ஊன்றுகால் புறக்கணை; நான்றுகால் விரல்துதி;
ஊன்றியே பின்னி யுரட்டுதல் கணையம்.

166

இன்னணம் கடைமடி யிறுக்கலே கடையம்.

167

முழமுழங் கவ்வி முடுக்கடி கோடி
நிறுப்பது முழவ நெறியென் மனரே.

168

முழமுழங்கவ்வி முடுக்கடிக் குறியில்
மிடுக்குறல் விரைய மென்மனர் முன்னோர்.

169

விரையத் தடிப்படி வீக்குதல் விரைநேர்.

170

இன்னண மையை யியல்புண் மச்சரி.

## இணைமச்சரி

171

இனியிணை மச்சரி யியலுரைப் பம்மே.

172

அணைபிணை கொணைஇணை யாமிவை இணையே.

173

ஊன்றுகால் முழமிசை ஒசிந்துமே நிற்ப
நான்றடி யதன்கணை நாட்டுதல் கணையணை.

174

நான்றடி கடைமடி நலுக்கல் கடையணை.

175

நான்றடி முழக்குழி நயத்தல் முழவணை.

176

நான்றடி துடைமிசை நச்சல் துடையணை.

177

நான்றடி யிடைநேர் நடுக்க லிடையிணை.

178

சரிகை விரிகை திரிகை கீற்று.
மாற்றும் தூக்கும் அணையடி வைப்பே.

## பிணையிணை

179

இருகாற் பின்னிய தொருகா லடியுற
மறுகால் நுனியுற மடங்கற் பிணையணை.

180

பிணையிணை யடி நுனிப் பெட்புறல் வீப்பிணை.

## கொணையிணை

181

அணைக்கால் கொணைதற் கொணையிணை யாமே.

182

அணையத் தெழுகாற் கணைமுன் துடைநீள்
மதவால் கெணைத்தை தாக்கல் கொணைந்தல்
மாற்றுற மறிதல் மாக்கொணை மூன்றே.

## இணையிணை

183

ஈரடிச் சரிகையில் இருமுழம் முன்மடி
ஆர்வுற நிற்றல் அடிமுன் மடக்கே.

184

அடிமுனக் கால்முழ முழமகல் மடக்கே.

185

சரிவிரி திரிகீற் றெனநா லடியே.

186

இருகால் விரற்கணை எழுந்துமேற் குதியுற
முழமிணை மடிய முயங்கல் குதியிணை.

187

விரற்கணை விரற்கணை மாற்றெதி ரிணங்கக்
குதிபுறங் குதிபுறங் கோட்டினில் நிமிரக்
கடைகடை கடைப்பக் கணைமுழம் நொடிப்ப
மாற்றுற நிற்கும் மாட்டே விரலிணை.

188

காலடி யகற்றிக் கணையமும் மடக்கி
மேலூற நிற்றல் மேவட் டம்மே.

189

விரலெழு வட்டம் விரல்வட் டம்மே.

190

குதியெழு வட்டம் குதிவட் டம்மே.

191

மாற்றகல் வட்டம் மறிவட் டம்மே.

192

மாற்றும் மூவகை மறிவட் டம்மே.

193

இன்னண மறுபா னிணைமச் சரிகை
நின்றதோர் நிலைக்கண் ணிகழ்பவை யென்ப.

194

இனியம ரிணைகளி றையுரைத் தும்மே.

195

அடிபின் வீக்கக் கடைமுன் னேர
மடிநெட் டிருத்தல் மடிமச் சரியே.

196

கடைமுழம் விரியக் காண்விரி மடியே.

197

மடியது படிய மடிப்படி மச்சரி.

198

கடையடிக் கடையடித் தரைமிசைக் கவ்வ
துடைநெட் டிருத்தல் துடைக்கோல் மச்சரி

199

இன்னணம் பலவா யிலமா மச்சரி
உன்னணம் கரண ஓத்துரைத் தும்மே.

## தாக்குரி

200

சச்சரி மச்சரி தாக்குறல் தாக்குரி.

201

தாக்கது குதிவிரற் ருக்கென விரண்டே.

202

தரைமிசைத் தாக்கல் தரைதாக் குரியே.

203

உடல்மிசைத் தாக்கல் உடற்ருக் குரியே.

204

அழல்மிசைத் தாக்கல் அழற்ருக் குரியே

205

நீர்மிசைத் தாக்கல் நீர்தாக் குரியே.

206

தாளம் தட்டல் தாளத் தாக்குரி.

207

மேளம் தட்டல் மேளத் தாக்குரி.

208

காளம் தட்டல் காளத் தாக்குரி.

209

வேளம் தட்டல் வேளத் தாக்குரி.

210

கூளங் தட்டல் கூளத் தாக்குரி.

211

முரசங் தட்டல் முரசத் தாக்குரி.

212

குடமுழாத் தட்டல் குடத்தாக் குரியே.

213

பறையடி தட்டல் பறைதாக் குரியே.

214

கழங்குத்தட் டாடல் காய்தாக் குரியே.

215

பல்லணைத் தட்டல் பல்லத் தாக்குரி.

216

எழுவரி எழுமணை யேழிசை வகுத்து
எழுகுரற் றட்ட லிசைத்தாக் குரியே.

217

பொறிநரப் பவைபுடைத் திடலிழைத் தாக்கே.

218

பன்னிரு வட்டணை படரல்வட் டணையே.

219

கோல்குதித் தாடல் கோற்றாக் கென்ப.

220

நூலணை யிட்டு நொடிப்புறத் தாக்கி
மேலணைக் காண மேவுதல் நூலே.

221

ஏணியிற் றுக்கல் ஏணித் தாக்குரி.

222

கறங்குறத் தாக்கல் கறங்குத் தாக்கே.

223

இன்னண மூவே ழியல்புக ளமைத்துக்
கச்சரி மச்சரித் தாள்வகை யாவும்.

தரையக முதலாப் பலவணந் தாக்கிக்
காற்காற் றிசைதிசைக் காலுதல் தாக்கே.

## தாப்புலி

224

தாள்தாட் டாவல் தாப்புலி யென்ப.

225

தாக்குரி யெல்லாம் தாப்புலி தழையும்.

226

தாக்குரி யின்றியும் தாப்புலி யுண்டே.

227

அணையிணை யென்னத் தாப்பிரண் டாமே.

228

ஒருகாற் கொருகா லோச்சுத லணையே.

229

இருகா லிருபா லியங்குத லிணையே.

230

ஊன்றுகா லொசிய நீன்றுகால் விசைய
நெட்டுற நெறித்தல் நேரணைத் தப்பே.

231

ஊன்றுகா லடிவிரற் குதியென மூன்றே.

232

ஊன்றுகால் வில்லுற நீன்றுகால் வில்லணை.

233

கடைநட் டதன்மேற் றுடைமட் டுறநீள்
நடைகீற் றணைதல் நகத்தாப் புலியே.

234

கடைதுடை கவ்வல் கால்விசைக் கோப்பே.

## 235

அணையெண் டிசையும் ஆர்ந்திடு மென்ப.

## 236

ஊன்றுகா லச்ச நீன்றுகால் சுற்றி
வட்டிடல் தாப்புலி வட்டணை யென்ப.

## 237

இனியிணைத் தாப்புலி யியலுரைப் பம்மே.

## 238

எதிரெதி ரிருகா லீர்த்தகல் விரியில்
தரையொடு முக்கோண் தழைவது முக்கோண்.

## 239

முன்பின் னளையும் முக்கோண் முளையும்.

## 240

அடிவிரற் குதிமுன் றடைவுமுக் கோணே.

## 241

இருகா லிருகா லிழுமென நழுவாக்
கோடுறல் தாப்புலிக் கோடென் மனரே.

## 242

முன்பின் கோடுறல் முடைகோ டென்ப.

## 243

இன்னண மொன்பா னென்பான் தாப்புலி.

## விச்சுளி

## 244

வெளிமிசை வீச்சே விச்சுளி யென்ப.

## 245

ஒருகாற் கொருகாற் றரைவெளி யொற்றை.

246

இருகா லும்வளி யேற லிரட்டை.

247

சச்சரி எடுப்பும் மச்சரி மடுப்பும்
தாப்புலித் தட்டும் தரையகம் தழுவா
வீக்கினில் வெட்டல் விச்சுளி யொற்றை.

248

ஒருகாற் கொருகா லொன்றுபின் ஞென்ருய்
ஓச்சுங் கடுவெளி வீச்சுவிச் சுளிநடை.

249

விச்சுளிப் பாய்ச்சல் விச்சுளிப் பாய்ப்பு.

250

எட்டிமேற் சுற்றி யிறங்கல்விச் சுளிச்சரி.

251

முன்பின் வலமிட முயங்குமிம் மூன்றே.

252

விச்சுளி வட்டிடல் விச்சுளி வட்டே.

253

தலைகீழ் விச்சுளி தான்கர ணத்தே.

254

இரட்டை விச்சுளி யியலுரைப் பம்மே.

255

இணைக்கால் விரிகா லெழுந்தெழுந் தியற்றல்
இணைவரி விச்சுளி ஏற்பென் மனரே.

256

இணைவிரி பிறைபிறை எழுந்துமே லிணங்கி
வடிப்புற வார்த்தல் மணைப்பிறை வளமே.

257

இணைப்பிறை முக்கோ லிறங்குதல் முக்கோல்.

258

இணைக்கா லிருபா லிடைக்கோ டெழும்பிக்
கோடாய் வடிதல் கோட்டுவிச் சுளியே.

259

கோலுற் றிறங்கல் கோல்விச் சுளியே.

260

மடக்குற் றிறங்கல் வட்டவிச் சுளியே.

261

முன்பின் காற்கால் முன்பின் ஞேங்கி
முன்பின் வார்தல் முன்பின் விச்சுளி.

262

மாறுகால் வார்த்தல் மாற்று விச்சுளி.

263

எடுப்பும் தொடுப்பும் படுப்பும் மடுப்பும்
கடுப்பும் மாற்றுங் கறங்கும் வார்ப்பும்
இயலியல் வகையே விச்சுளி யியங்கும்.

264

அமைப்புக் குதிவிர லடிமூ வகையே.

265

மற்றைவிச் சுளிநிறை மதிகா ணத்தே

*மீச்சுரி*

266

கடிமேல் மீக்கொளும் கால்மீச் சுரியே.

267

மீச்சுரி யிடவலம் முன்பின் மேவும்.

### 268

தடந்தோள் குரல்நுதல் தலைமீ நேரலை
முள்மீச் சுரியா ருமென மொழிப.

### 269

நடுவணை கழுகு பிடரிமே லுச்சி
நாலே பின்மீச் சுரியென நவில்ப.

### 270

அடிமீக் கொளவுட லதுமுற் கொளவே
நாற்றிசைக் கண்ணும் நடுமீச் சுரியே.

### 271

அடிப்பின் மீக்கொள உடற்பின் ஞக்கொள்
நாற்றிசைக் கண்ணும் நடுப்பின் னிணையே.

### 272

மீச்சுரி யிணையம் மேற்கர ணத்தே.

## நடுக்கிளை

## பரடு

### 273

ஒங்க லொருங்க லேற லிறங்கல்
விரிதல் குவிதல் பரடுறு வினையே.

## இடை

### 274

வெட்டல் விலுக்கல் விறுக்கல் முறுக்கல்
நெட்டல் நெரிதல் வட்டின் நிலையே.

### 275

இடைத்தொழில் பலவும் அடைவென் மனரே
அடைவெலாங் கரணத் தடைவிற் காண்க.

## வயிறு

### 276

மேம்பல் குழைதல் கூம்பல் வயிறே.

277

ஒட்டியா ணக்கணை யோச்சுத லொட்டே.

முதுகு

278

ஆட லுணுங்கல் கூடல் விருங்கல்
நீடல் நெளிதல் முதுகின் நிலையே.

தோள்

279

ஏற லிறங்கல் வீறல் விலுங்கல்
படமசைத் திடுதல் முழிகிறுக் கிடுதல்
கோணல் குலுங்கல் குவிதல் தோளே.

மார்பு

280

வீங்கல் தூங்கல் வேம்பல் சாம்பல்
ஏங்கல் தூங்க லிணையல் பிணையல்
தோய்தல் துடியல் தசையிற் றுளைதல்
சாய்தல் மேய்தல் தடநேர்த் தழைவே.

பத்கம்

281

நெட்டல் நெளிதல் நெரிதல் சரிதல்
வெட்டலு மண்ணை மேவுந் தொழிலே.

கை

1

கைக்கைக் குழிப்பின் கைம்முழங் கைம்முள்
கைக்கணைக் கைபுறங் கையகங் கைவிரல்
கைந்நக மொன்பதுங் கையெனக் கூறு.

கைக்குழி

2

கவிதல் விரிதல் குவிதல் கக்கல்
விக்கல் வெடைத்தல் புடைத்தல் கக்கம்.

## பின் கை

3

பீக்குத் தசையைப் பிலுக்கல் பின்கை.

## முழங்கை

மடங்கல் முடங்கல் மறிதல் செறிதல்

4

முரணல் முடைதல் முலுக்கல் முழமே.

## முன் கை

5

முறுக்கல் விறுக்கல் முன்கைத் தொழிலே.

## கணைக்கை

6

நாற்றிசை மடங்கு நலுக்கல் கணையே.

## புறங்கை

7

கணைவரி காட்டி கலுக்கல் புறமே.

## அகங்கை

8

அங்கை யகங்கை விரலே நகமே.

9

அங்கையே கையென் றழைக்கப் படுமே.

10

அங்கைத் தொழிலே அவிநயக் கோப்பு.

11

அங்கைத் தணிக்கை குறிப்பின் தழைவே.

12

இணைக்கை யிணைக்கை யிணைக்குங் குறிப்பே.

13

அலைக்கை கணைமே லகங்கை புறங்கை.

14

அங்கையைச் சார்ந்தே அணிவிரல் இலகும்.

15

அங்கையின் மறிப்பே புறங்கை யென்ப.

16

அங்கையும் விரலும் அணைவது தொழிலே.

17

தனிக்கை தனிக்கைக் குறிப்பின் தழைவே.

18

கைம்முழத் தொழிலும் கரணத் துரைத்தும்
ஐவிர லவிநயத் தலகுரைப் பம்மே.

## கைவிரல்

19

கையகக் காட்சி கைவிர லாட்சி.

20

கைவிர லைந்தும் கருவெனப் படுமே.

21

சிறுவிரல் மாயை சிறுமையே யென்ப.

22

அணிவிரல் கருமத் தடைவே யென்ப.

23

நடுவிர லாணவ நட்டே யென்ப.

24

சுட்ட துயிர்ப்பின் சுட்டே யென்ப.

25

விட்டது பரமன் வீடே யென்ப.

26

விட்டக ரம்மே சுட்டிக ரம்மே
நட்டுக ரம்மே கட்டைக ரம்மே
சிட்டைக ரம்மே சேர்ப்பொக ரம்மே
கவ்வெள கரமே காட்டினர் முனிவர்.

27

கைக்கணைக் கரக்கரு வென்னுர் விட்டின்
அடியது ஙகரம் நடுக்கணை சகரம்
முடிக்கணை ஞகரம் மெனமுறை முறையே
நால்விற லடிநடு முடியீ ராறும்
டணதந பமயர லவழள வென்றும்
நால்விரல் வேர்நிமிர் ஸஷக்ஷஜ வென்றும்
சேய்நிமிற் றகரம் மதநிமிர் னகரம்
சுட்டுவிட் டிடைவெளித் துணையுறு மாய்தம்
கைநடுக் குழிஹர ஹரச்சிவ மென்றும்
மெய்யக ரத்தமிழ் விரித்தனர் முனிவர்.

28

ஆரியத் தமிழை அகத்திய லோர்க.

29

ஆரிய மிரண்டும் அறியார் கூத்தின்
விரிய மறியா வெறுமைக் கூத்தர்.

30

சிறுவிர லடிமுதற் சுடுவிரல் நுனிவரை
இயலீ ரறுமனை யிராசிக ளென்பம்.

31

விட்டுமுக் கணையோ கங்கர ணந்திதி.

32

சுட்டடிப் பொன்னே நட்டிக் காரே
கட்டடிக் கதிரே சிட்டடி மாலே
எனவிரல் வேர்கள் நாற்கோ ளென்ப.

33

அங்கை யிடத்திடை யதுசேக் கோளே
அங்கை யிடத்தடி யதுமதி யென்ப
விட்டடி மேப்பது வெள்ளியே யென்ப
விட்டுச்சுட் டணைவரி வீக்குவர லரவே
நட்டகத் தங்கைத் தலையிலா வுரகம்
இன்னணங் கோள்வகை யியல்பென் மனரே.

34

மட்டது மண்ணே கட்டது நீரே
நட்டது தீயே சுட்டது வளியே
விட்டது விசும்பே வெள்ளிடை வெளியே.

35

மட்டது மனமே கட்டது புந்தி
நட்டது சிந்தை சுட்டா ணவமே
விட்டது தானே விளக்கினர் முனிவர்.

36

இவையெலாம் மேரணத் தெழுதுவ ரறிஞர்.

37

சிறுவிரற் செறிவே சிதைவே யென்ப.

38

அணிவிர லழகே குழகே யெனப.

39

நடுவிரல் சினப்பே முனைப்பே யென்ப.

40

சுட்டது சுட்டே தூர்ப்பே யென்ப.

41

விட்டது பிடிப்பே விலக்கே யென்ப.

42

கைவிர லைந்தின் கருவே கூத்தில்
ஐவகை யைவகைப் பொருளா யமையும்.

43

சுட்டுயிர் மற்றவை நெட்டென விட்டு
விட்டதோர் பரனைத் தொட்டணைந் திடுதல்
தென்முகக் கூத்தன் திருநால் வர்க்கும்
உண்முக மாக உணர்த்திய குறிப்பே.

44

சின்முகச் சுட்டொடு நட்டதும் சேர்ந்தும்
உண்முக மாதல் உமையனைக் குறியே.

## வலமிடம்

45

தனிக்கை யிடக்கை வலக்கை யகமே.

46

தனிக்கை யிரண்டும் தனித்து மிணைந்தும்
இயங்கல் கூத்தவி நயத்தி னியல்பே.

47

வலக்கை யோங்கு மிடக்கை தாழும்.

48

வலக்கை செயலா மிடக்கை யமைதி.

49

வலக்கை யிரவி இடக்கை மதியே.

50

வலக்கை யன்பா மிடக்கை யருளாம்.

51

வலப்பா லவனு மிடப்பா லவளாம்.
இருவரு மிணைந்த கூத்திவ் வுலகம்.

52

இனித்தனிக் கைக்குறி யதுவுரைப் பம்மே.

# தனிக்கை

## காப்பு

53

வலக்கை காப்பாம் இடக்கை வரமாம்.

54

காப்பும் வரமும் கைக்குறிக் கருவே.

55

பெருவிரல் நிறுத்தி மறுவிரல் நான்கும்
நிமிர்ந்ததொன் றுகும் நெறியே காப்பு.

56

காப்பும் வரமும் கைமாற் றுமே.

57

காப்பைக் கீழுறக் காட்டல் வரமே.

58

காப்பிற் பெருவிரல் கோப்பது கோப்பே.

59

காப்பது தெய்வக் கையக மாமே.

60

கோப்பது மக்கட் கூத்துறு காப்பு.

61

காப்பே வரமாம் வரமே காப்பாம்.
ஒருநா ணிரிலெ யொாணறே யென்ப

62

காப்பும் கோப்பும் காப்பே கனிவே
அன்பே அருளே அமைவே யடக்கம்.

63

கடையது நாட்டுக் காப்புக் கணைந்து
புடைப்புடை யலசல் பொங்கும் பதகம்.

64

காப்புநே ரணைதல் காரிய மறுப்பு

65

காப்புநேர்க் கீழ்மேற் காட்டுதல் பூச்சு.

66

காப்புறு விரல்விரி கடுக்கல் கடுவனம்.

67

கடுவனம் பாய்சிலிக் கார்முகி லென்ப.

68

கடுவனம் கோடுறக் கடுப்பது வாளே.

69

கோப்புநேர்க் கீழ்மே லசைத்திடல் நாளே.

70

காப்பது படிமுகம் கவிழ்ந்துகீழ் மேலா
இறைகுவிந் தியங்கல் இரவென் மனரே.

71

கோப்பது குவிந்து மேற்கீழ் கோப்ப
இளமையே மடமை யென்மனுர் புலவர்.

72

காப்பது மேற்கீழ்க் கவிப்பதா ணையே.

73

காப்பதை மீமிசைக் காட்டுதல் வானே.

74

காப்பது கைமேற் கவிந்துறல் களபே.

75

காப்பது வாயகம் காட்டுதல் மோனம்.

76

காப்பதைப் படிமுகம் காட்டிக் கனன்று
கிணைக்கிணை வீக்கல் கடுவிசைப் பரியே.

77

காப்பதைத் தடைநேர்க் காட்டுதல் கண்ணடி.

78

காப்பனைச் சரிதல் காண்பது தெருவே.

79

தெருவது சிலும்பல் தேர்நதி யென்ப.

80

காப்பினை மேற்கீழ் காட்டுத லேடே.

81

காப்புறக் கையிணைக் கடியளை யார்ந்து
மாப்புற மறிதல் மாத்துகி லென்ப.

82

மாத்துகிற் கீழுற மயில்மணிப் பீலிகை.

83

காப்பது கருவே மற்றவை யுருவே.

## நாண்

84

காப்பின் சுட்டிறைக் கவிந்துற லலகே.

85

அலகே செயலே திறனே யாற்றே
கட்டே கவ்வே கணையே குணையே
அங்குலி யங்குச மமுதே நஞ்சே
அலுகப் புயலே யார்ப்பே யென்ப.

## நாண்

86

காப்பின் நட்டிறைக் கவிதல் நாணே.

87

நாணே தயக்கே நயக்கே நலுக்கே
உண்முக நகையே யுயிர்ப்பே யொக்கே
ஊடலே யுறவே யுணக்கே யென்ப.

## நாட்டம்

88

நாட்டம் கண்ணே நாட்பூ மையே
பொட்டே கன்னப் புரியே மார்பத்
தெழுத்தே மாப்புணைந் திடலே யல்குற்
குச்சரி காலடிக் குச்சரிக் களவக்
குழிப்பே வழிப்பே குழகே யென்ப.

89

காப்பின் கட்டிறைக் கவிதல் நாட்டம்.

## ஈச்சிறை

90

காப்பின் சிட்டுபிற் காலுறக் கலித்தல்
ஈச்சிறை யெனவே யியம்பின ராமே.

91

ஈச்சிறைக் குச்சிறைப் பூச்சியீ விட்டில்
மசகே நொசகே மொசகே யென்ப.

## கரிக்காது

92

காப்பின் சுட்டடிக் கணேமிசை மறிதல்
கரிக்கா தென்பர் கற்றுணர்ந் தோரே.

93

ஊரிக்கா திறைக்கைக் குடைகந் தருவர்
கருடப் புள்ளிசை கலக்கென் மனரே.

## கடி

94

காப்பின் நடுவிரல் அடிவரைக் கவிதல்
கடியென் றுரைத்தார் கற்றுணர்ந் தோரே.

95

கடியே கடியது கடிகைக் கருமை
ஆணவம் கலவியாய் வகடித கடனத்
தார்ப்பே யங்குலி மீன்புள் மரப்புள்
ஒஞன் நாரை யுடும்பே யென்ப.

## அணி

96

காப்பணி விரலடிக் கணைமிசைக் கவிதல்
அணியென் றுரைத்தா ரணியறிந் தோரே.

97

அணியே யணியே யழகே குழகே
அணையே துணையே திணையே யழுதே
தேவே திருவே யுருவே திறலே
மகுடே முடியே வகுடே வரையே
ஐந்திரன் வைரப் படையே யனல
தாழையே கணையே தழலே விளக்கே
கண்ணக மையே காதக மெய்யே
முன்பிறைப் பொட்டே மூக்ககம் நாற்றம்
வாயக மினிப்பே மார்பக ஞானம்
கமுகக மிசையே கடியகங் கலவி
தலையக மயக்கம் நச்சே யென்ப.

## ஈரிழை

98

அணியணிச் சிறுவிர லணைத லீரிழையே.

99

ஈரிழை யின்ப மிணக்க மிலக்கம்
திண்ணகம் தேட்டம் தேப்பம் துளிரிலே
பலகைப் படகம் பாத்தாம் குறுவாள்
இருளீ வாழை இருமை என்ப.

## கொம்பு

100

ஈரிழை விரித்தல் இணைமரக் கொம்பே
நீள்வெறிப் பூவே நெடுக்கூங் கலமே.

## சிற்றிழை

101

காப்பிற் சுட்டும் நட்டும் கவிபக்
கோப்பது சிற்றிழைக் கோப்பெனக் கூறுப.

102

சிற்றிழைச் சிறுமைச் செறிவே சிதைவே
குறையே குறுக்கே கோணே குலைவே
வறுமையே பொறுமை வெறுமை யென்ப.

## பேரிழை

103

காப்பணி நடுவிரற் கவிதல் பேரிழை.

104

பேரிழை சிற்றிழை மாறிய பெற்றி.

## அலரம்

105

காப்பிற் கோப்பிறை கலையக் கைம்முடி
நட்டணை விட்டுற ஈடுவ தலரம்.

106

அலர லரும்பல் மலர்த லலரம்.

## மரைப்பூ

### 107

காவிர லகன்றே பின்முகம் நேட்ட
விட்டுமுன் முகமா விரிவது மரைப்பூ.

### 108

மரைப்பூ மலர்ப்பூ மணப்பூ கலிப்பூ
மதிப்பூ மறைப்பூ மனப்பூ வெனப

## ஊசி

### 109

காப்பினிற் சுட்டது கணைத்துமேல் நிற்கக்
கோப்புறு மற்றவை குவிந்துவிட் டொடுங்கக்
காட்டுத லூசிக் கையென் மனரே.

### 110

ஊசியே ஒன்றே சிவமே கதிரே
அதுவே இதுவே எவரே யாரே
ஒல்லியே பகுப்பே யோச்சே நிலையே
கமலத் திழையே காட்டே யென்ப.

### 111

கீழ்மேல் சுழற்றி யண்ணையிற் கீக்கீக்
காட்டுத லந்தியின் காட்டென மனரே.

### 112

அந்தியை மாற்றி யமைப்பது விடியல்.

### 113

விடியலை மீப்புறம் வீக்குதல் நடுநாள்.

### 114

அந்தியைக் கீழ்ப்புற மமைத்தல் நடுநிசி.

### 115

தலைமேற் சுழற்றல் தான்மன மன்னே.

129

இடத்தோள் முதல்வலக் கடிவரை யீர்த்தல்
மேலாப் பிழையின் வியப்பென மனரே.

130

நெஞ்சுநேர்ச் சுற்றல் நெறியிலாக் காமம்.

131

கொங்கைமேற் சுற்றல் கோப்பனைக் குறியே.

132

நெஞ்சநே ருந்தி நெறிதல் மயிர்ச்சரி

133

இடைநே ரிடவல மியற்றுத லுடையுரி.

134

இடைநே ரூசியின் இணைவிலக் கிடனே
தடநேர் மடியைத் தாளவிலக் கிடலே.

135

அதன்கண் ணூசிவிட் டார்த்தல் கலவி

136

முன்முகம் நீட்டல் முன்நீ எனலே.

137

உன்முகம் நீட்ட லுன்னுன் எனலே.

138

அணைமுகம் நீட்ட லவரிவ ரெனலே.

139

பின்முகம் நீட்டல் எவரோ எதுவோ !

140

அளைவா னசைத்தல் அதுவிது வெனலே.

141

மேன்முகங் காட்டல் மேலோர் தேவர்.

142

கீழ்முகங் காட்டல் நாகர் நாகர்.

143

எதிர்முக நலுக்கிழை யிழுபுழு கிழுவே.

144

இன்னணம் பலபல வூசியி னியல்பே.

பத்து

145

ஊசிவிட் டதுவிட் டோங்குதல் பத்தே.

நூறு

146

பத்தின் நடுவணை நட்டுறல் நூறே.

ஆயிரம்

147

நூற்றினிற் சுட்டும் நட்டுமுள் வெட்டி
ஒன்றுபின் னென்று யணியணை யொட்டி
அடுக்கிக் காட்டல் ஆயிரம் என்ப.

இலக்கம்

148

அணியுமிவ் வகையே யமைவ திலக் கம்.

கோடி

149

சிறுவிர லின்னணம் செறிவது கோடி.

150

இன்னண மிருகை யேறலெண் ணிலவே.

கத்தரி

151

ஊசியிற் சுட்டுடன் நெட்டுமே யோங்கி
கண்ணிறை விரியக் காட்டல் கத்தரி.

152

கத்திரி கத்தரி காதல ருட்பிரி
தனிமயக் குத்தரி தலைநறுக் குத்தரி
உண்மயக் குத்தரி யுடை யறுக் குத்தரி.

153

படுப்புறு கத்தரி பறவையி னலகே
இருதலைப் புள்ளே யிடுக்கியே முதலை
வாயே மகரிகை வாலிணை யரவே.

154

கீழுறக் கத்தரிக் கீக்குதல் நடையே.

*மழைப்புள்*

155

கத்தரி நடுவில் விட்டுகிர் காட்டிச்
சாய்ப்புற நிறுத்தல் தான்மழைப் புள்ளே.

*மீன்*

156

கத்தரி யலகுகள் சடைக்கடைக் கவ்வி
எதிரெதிர் மறிதல் மீனே யென்ப.

157

மீனது கண்ணே புள்ளடி மீனே.

*கொடி*

158

கத்தரி யலகுகள் கணைமுறுக் கிட்டு
விட்டடி யொட்ட விளைவது கொடியே.

159

கொடியே பிணையே கயிறே குணையே.

## அரி முகம்

167

விட்டதும் நட்டதும் கட்டது மொட்ட
அற்றவை நிமிர வரிமுக மென்ப.

168

அரிமுக மரிமுக மரியனை யரிப்புல்
சிரிமுகம் சிற்றிடை திரிமுகங் கொங்கைக்
குவிமுகம் பாட்டிற் கடிமுக மென்ப.

## மான் தலை

169

விட்டுமேல் நட்டதுங் கட்டது மேவ
மற்றவை நிமிரல் மானதலை யென்ப.

170

மானதலை மானதலை மாத்தலைத் தையல்
குடைத்தலை விடத்தலை குறுக்கிடல் மான்தோல்
அலைத்தலை அணிதலை அடைத்தலை இலைத்தலை
கிறித்தலை வெறித்தலை கீக்கலைத் துள்ளலை
வெலைத்தலை விதிர்த்தலை மறைத்தலை யென்ப.

171

மானதலை மேல்முகம் மலராத் தாழை.

172

நெஞ்சுசேர்க் கவித்தல் சேரிழைப் பாகனே.

## அக்கம்

173

விட்டதுங் கட்டதும் நட்டது மொட்டி
மற்றவை நிமிரல் மால்சிவ னுக்கே.

174

அக்கமே யுருத்தி ரணக்கமே மால்வரி
மல்லியே முல்லை மயிர்க்குச் சரியென

சில்லிறு நீரே வேள்ளின் நீரே
முத்தே பவளமே முன்மணிக் கொத்தே.

## கோழி

175

விட்டதும் கிட்டதும் ஒட்டிய மற்றவை
விட்டுமே நிமிரும் வியப்பது சேவல்.

176

சேவலே சேவல் மூவகை புலகே
பௌழியம் தலவகம் சந்தக மென்னும்
முதல்மும் முறையே மூவரே யென்ப.

## செம்மை

177

சேவலின் நட்டுமுன் செறிவது சிவப்பே.

## கரி முகம்

178

நட்டது நெட்டு மற்றவை விட்டிற்
பட்டிடப் புறங்கை மட்டசை விரலின்
கொட்டங் கரிமுகக் கோப்பென மனரே.

## உரகப்படம்

179

கோப்பிடை நால்விரல் கைவிற்க குனிதல்
உரகப் படமென வுரைத்தனர் முன்னோர்.

180

உரகப் படமரா நச்சுரி வெறியே
குறுக்கே மறுக்கே குனிப்பே குறனே
சேறே சிதைவே சிதலே மோமடி
ஈகையே யிரக்கம் இடரே யென்ப.

## வாலரவு

### 180

உரகப் படத்தி லொட்டிய விட்டது
விட்டனை வீக்கும் வெறிவா லரவே.

### 181

வாலுடை யரவே மாயனுரை னையே
வாணகத் தாறே வளர்குண் டலியே,

## உரகநா

### 182

நச்சுப் படத்தின் நடுவிரல் நீட்டி
உன்னி யுலுக்கல் உரகநா வென்ப.

## வால்வாய்

### 183

உரகச் சிறுவிரல் பெருவிர லுருகிக்
கவ்வுதல் வால்வாய்க் காலமாம் சேடன்.

## உமையணி

### 184

இன்னண மணிவிரற் கேற்புமை யணியே.

## சிவணணி

### 185

இன்னணம் நடுவிரற் கியல்வது சிவணணி.

## மண்டலி

### 186

இன்னணஞ் சுட்டி னியல்புமண் டலியே.

### 187

மண்டலி சுன்னே மதியே வட்டே
பரிதிதிப் பூவே படிமண் டலியே.

## குறிப்பு

188

உரகச் சிறுவிர லடியிற் பெருவிரல்
குறுகுங் குடைசிவன் குறிப்பு வென்ப.

## தேளணி

189

இன்னண மணிவிரற் கியல்வது தேளே.

190

தேளணித் தீவம் கற்புரம் திருவே.

## உன்மதம்

191

இன்னணம் நடுவிரற் கியல்வதுன் மதமே.

192

மாலே மயக்கே தியக்கே மதமே
மாலையே முயக்கே மலைப்பே யுன்மதம்.

## பாத்து

193

உரகப் பெருவிரல் விரவிக் குனிவிரல்
பரவல் மருந்துத் தாந்தேர் பாத்தே.

194

பாத்தே யணியே கணியே பண்ணே.

## அன்னச்சிறை

195

உரகத் தணையிற் சிறுவிர லோங்கி
விரவுத லன்னச் சிறையின் விரிவே.

196

எல்லையே கொல்லை எழிலே பொழிலே
முல்லையே கரையே முடைவே துறையே.

197

தலைமிசைக் கவிந்து தழைதல் வகுடே.

198

தலைமீ நிறுத்தற் றுன்மகு டென்ப.

199

தோள்மிசை நிறுத்தல் தேக்கணச் சிறையே.

200

நெஞ்சிடை நிறுத்த லஞ்சிடை யன்பே.

201

தலைப்பின வார்த்தல் தழைகுழல் வார்ப்பே.

கணை

202

அன்னச் சிறையுட் குனிவிர லவற்றைக்
கட்லட விரலது கவ்வுதல் கணையே.

203

கணைகணை யாறே கரையே துறையே
மீன்பிடி தூண்டில் மிலுக்கே யென்ப.

விற்பிடி

204

நால்விரல் வேரிடை நாட்டிய மூத்தி
விட்டதை விட்டுமே லெட்டியே நிற்றல்
விற்பிடி யென்ன விளம்பின ராமே.

சிகரம்

205

விற்பிடி நால்விரல் அங்கையி லொடுங்கச்
சிகர மாமெனச் செப்பினர் புலவர்.

206

சிகரமே சிகரம் செழிப்பே சீர்த்தி
சிறப்பே செழிப்பே சேணே தூக்கே
கேள்வியே மெய்யே சீர்த்தியே யரசே
மலையே மாட்டே மதனே முனையே.

207

சிகரம் சிரமீச் சேர்வது சிவமே.

208

சிகரத் தினைதலை சேர்வது குருமொழி.

209

சிகரம் நுதல்நேர்த் தீர்வுறல் ஞானம்.

210

சிகர மறித்து நுதற்கடை சீத்தல்
புருவ வில்லெனப் புகன்றன ராமே.

211

சிகரத் துண்முகம் கண்கடை சீத்தல்
மேலிமை யென்றுன் மின்னிணைக் காரன்.

212

சிகரம் படுத்துச் சிக்குதல் கீழிமை.

213

சிகரம் வாய்நேர்ச் சீப்பது பல்லை
விளக்குதல் சொல்லை விளக்குத லென்ப.

214

சிகரம் குரலிற் சிலிப்பது மறையே.

215

சிகரம் நெஞ்சுறத் தேர்வுறும் தேப்பம்.

216

சிகரம் நேர்ப்புறச் சீரிய குந்தம்.

217

சிகரம் பம்பிச் சிலைப்பது கேள்வி

218

சிகரக் கன்னம் தேக்கத் திண்ணம்.

219

சிகரத் தின்முடி வாயிதழ்ச் சேர்தல்
காள மிசைப்பதைக் காட்டு மென்ப.

220

சிகர மிசைப்பது சிகரத் தொருந்தி
அகரத் தலைவனை யழைப்பதே யென்ப.

221

சிகரத் துள்வெளிச் சிறுபட கென்ப.

222

சிகரங் கீழுறற் செத்தோர்க் குறுநீர்.

223

சிகரம் பின்மேற் செறிவது குடிநீர்.

224

சிகரம் அகற்றல் செடிகொடி யகற்றல்.

225

சிகரமேற் சிகரம் சேர்வது பின்னல்.

226

சிகரத் தலசிச் சிலுக்கல் முளையே.

கட்டு

227

விட்டது சிகரச் சுட்டினைக் கவ்விக்
கட்டி நெருக்கல் கட்டென மொழிப.

228

கட்டே கட்டே கரவே குத்தே.
பெட்டே செட்டே முட்டே யென்ப.

229

மயிற்பிடி மல்லர் மடக்கடி பூசற்
கிலிப்பிடி யெனப்பிடிக் கிடுக்கது கட்டே.

230

மார்புநேர் கட்டது மந்திரக் கருவே.

231

கட்டுவிட் டொட்டல் கரவுக் குறியே.

232

கட்டுவிட் டதுநடுக் கடவுதல் வாள்வேல்.

233

கட்டுவிட் டதுநடுக் கண்ணோர்க் கதையே.

234

கட்டிணை முன்பின் காண்துகிற் பிழியே.

235

கட்டிணை முழமுறல் கழையொடிப் பதுவே.

236

மறைப்புறு சைகை மத்துக் கடைதல்
கட்டிணை வாங்கிக் காட்டுத லாமே.

## ஊருன்

237

கட்டுப் பெருவிரல் கடையக மேற்கீழ்
ஒட்டிப் பெயர லூருு னென்ப.

## கோக்கி

238

கட்டின் விட்டு கணைக ளொசிந்து
கட்டுழைக் கொட்டக் கொட்டக் கல்வி
நெட்டு நெரித்தல் கோக்கியின் நெறியே.

## இலிங்கம்

239

கட்டு நடுவணைச் சுட்டிழை யொட்டி
விட்டுகிர் நட்டலி லிங்க வியப்பே.

## சிவனருள்

240

கட்டுறு நொட்டினில் விட்டுகிர் நட்டுச்
சுட்டுகி ருகிர்ப்புறம் நெட்டுதல் சிவனருள்.

## சிவையருள்

241

சிவையருள் விட்டதும் சுட்டது முகிருகின்
மட்டிணை விட்டே யொவுதல் சிவையே.

## மட்டி

242

சுட்டு நால்விரல் பெட்டிணைப் புக்க
விட்டிணை யொறுக்கும் வியப்பே மட்டி.

243

மட்டியே மட்டி மட்டகங் கொட்டி
கொத்தல் கெழுட்டிக் குத்தக மென்ப.

## நெட்டுளி

244

விட்டது சுட்டிடை நட்டிடை புக்கு
நெட்டு நிமிர்ந்தது நெட்டுளி யாமே.

## முட்டி

விட்டது நட்டிடை கட்டிடை நெட்டல்
கொட்டக மட்ட முட்டியே யென்ப.

245

முட்டியே சிணையின் முதிர்வே யென்ப.

## கீக்கு

246

விட்ட தணிசிறு விரலிடை நெட்டல்
கீற்றைக் கீறுங் கீக்கென் மனரே.

## புலி முகம்

247

விட்டகங் கையில் மட்டகங் கோல
கட்டுநால் விரலும் கொட்டிமே லொட்டக்
காட்டுதல் புலிமுகக் காட்சியென மனரே.

## கல்லுளி

### 248

கட்டணை புக்க விட்டதப் புறமே
நெட்டுகிர்க் குத்தற் கல்லுளி நெட்டே.

## மாமட்டி

### 249

கட்டு நால்விரற் கையக நீங்கு
சேர்க்கணை யொட்டி வீக்கி வெறிப்ப
விட்டது சுட்டின் நுனியினை நெட்டும்
கட்டது வேமா மட்டியா மென்ப.

## எழுத்தாணி

### 250

சுட்டுஞ் சிட்டும் விட்டி லொடுங்க
நட்டும் கட்டும் நடுவணை மட்டித்
துளையுற நிற்கும் துறையெழுத் தாணி.

## குறுவாள்

### 251

சுட்ட தூசியின் தூக்கிறை குனிய
விட்டது மூவிர லொட்டிமே லோங்கிக்
கோப்பதே சரிகைக் குறுவா ளென்ப.

## ஆணி

### 252

ஊசிச் சுட்டடி வேர்மிசை யோர்புறம்
விட்டுகிர் நட்டிட லாணியின் வீப்பே.

## சிற்றலகு

### 253

ஊசிச் சுட்டடி விட்டணை யொட்டல்
சிற்றல கென்னச் செப்பின ராமே.

## கீற்றலகு

### 254

சிற்றல கொட்டிய விட்டுமே லெட்டல்
கீற்றல கென்னக் கிளத்தின ராமே.

## அரிவாள்

### 255

ஊசிச் சுட்டிறை யொருங்க லரிவாள்.

## கிளி முகம்

### 256

அரிவாட் சுட்டடிக் கணைமிசை யொசிந்து
நேர்நிமிர் விட்டுகி ரொட்டென நட்டு
வீக்கிநிற் பதுவே கிளிமுக வியப்பு.

## கிளிச்சிறை

### 257

சுட்டும் விட்டும் கிளிமுகம் துன்ன
நட்டும் சிட்டும் நடைநிமிர்ந் தோங்கக்
கட்ட தடிக்கணை மட்டுநே ரிட்டல்
கிளிச்சிறை யென்னக் கிளத்தலு முண்டே.

### 258

கிளியே கிளியே வில்நாண் கீக்கே
அன்பே தூதே யளப்பே யென்ப.

## காக்கை

### 259

கிளிமுகச் சுட்டுக் கீற்றிடக் கடைவரை
எட்டியே பெருவிர லொட்டியே நிற்பக்
கைக்கணைத் திருப்பிக் கவ்வுதல் காக்கை.

## கிலம்

### 260

காக்கைப் பெருவிரல் சுட்டின் கடைநுனி
ஒட்டியுள் வளைவது கிலத்தின் உருவே.

261

கிலமே கிலமே கீடமே கிருமி.

## புழு

262

சுட்டுறு சூசிச் சுருங்கி விருங்கிப்
புடைபுடைப் பெயர்வது புழுவென் மனரே.

## சிற்றுறை

263

சுட்டும் நட்டும் கட்டுமே யொட்டி
முன்னே ரங்கை முடைநேர் நீளச்
சிட்டது பின்னோர்ச் செறிய விட்டது
சுட்டடி கவ்வத் தோற்றுஞ் சிற்றுறை.

264

சிற்றுறைச் சிற்றுறை சிறுமைச் சொற்பம்
கத்துரிக் களவம் கனகம் செப்பு
இரும்பே கடுகே எள்ளே எண்ணென்.

## வட்டப்பாறை

265

நட்டுகிர் சுட்டுகிர் நட்டுவட் டாடக்
சுட்டதைத் தட்டல் வட்டமாப் பாறை.

266

வட்டமாப் பாறையே வட்டமா மணியே
சிட்டுறுங் கொன்னைச் செம்பரத் தம்பூ.

## ஓரிலை

267

ஊசிமு விரலவை யொருசிறை தளர
உற்றவிட் டதுமறிந் தொருபுடை சிவண
சுட்டுநேர் நிற்ற லோரிலைத் தூக்கே.

268

ஓரிலை யுண்மை யூக்கமே யுறுதி
கட்டுரைக் கோடே வெட்டுரை யென்ப.

## ஆந்தை

### 269

சட்டக விட்டை மட்டவை யொறுக்கி
நட்டது மெட்டி நலுக்குவ தாந்தை.

## சங்கு

### 270

மட்டகம் சரிந்தே விட்டணை யொட்ட
விட்டணை யுகிர் நுனி விரியத் தாழ்த்தும்
வட்டணைச் சங்கின் வளமென் மனரே.

## நாரை

### 271

சங்குடைச் சுட்டுச் சூசியிற் றுவ
விட்டத னடிக்கணை யொட்டுதல் மேவக்
காட்டுதல் நாரைக் கவினென் மனரே.

## கொக்கு

### 272

கடைக்கை நிமிர்த்திக் கணைக்கை நெரித்து
நாரையைக் கீழுற நாட்டுதல் கொக்கே.

## நத்தை

### 273

சுட்டும் சிட்டும் மட்டுமே வீக்க
மற்றவை விட்டணை மறிப்பி லொடுங்க
நீட்டி நெளிக்கும் நெறியே நத்தை.

## பரங்கிப்பூ

### 274

நட்டும் கட்டும் விட்டடி யொடுங்க
விட்டுமுன் வீக்கி விரிய மற்றவை
நெட்டுற நிமிர்தல் பரங்கிப் பூவே.

## குயில்

### 275

சுட்டுக் கடைவகை விட்டது மொட்ட
மற்றது விட்டடி மடங்கல் குயிலே.

## அட்டமி

276

காகப்பின் விட்டது கடைப்புறம் வீக்கி
வெறித்த லட்டமி வெண்பிறை யென்ப.

277

அட்டமி யட்டமிச் சிட்டமி யுமையே.

278

அட்டமிப் பல்லம் அதனைத் தாமுகம்
காட்டிமுன் நீட்டல் கழுத்துறத் தள்ளல்.

279

அட்டமி கனைக்கை யதுவனை காப்பு.

280

அட்டமித் தோள்சே ராக்கிமேற் சேரல்
அட்டமி உதயத் தணியென் மனரே.

## சிலிமுகம்

281

அட்டமிச் சுட்டுடல் விட்டதும் விட்டு
மற்றவை வேருறக் கீழுற நட்டுப்
பாய்தல் சிலிமுகப் பாங்கென் மனரே.

## கழுது

282

சுட்டது நட்டு விட்டது விட்டு
மற்றவை நெட்டு மடமடத் திட்டு
கீழுறத் துனைக்கும் கிறியே கழுது.

## மணி

283

விட்டது சுட்டுட னெட்டிவாய் நிமிர
மற்றவை யலர்தல் மணிக்கை யென்ப.

284

மணிக்கை மணித்தேர் மதியே யென்ப.

## நீர்ப்புள்

### 285

சிறுவிர லுகிருகிர்ப் பெருவிரல் கவ்வ
மற்றிரண் டப்பெரு வட்டிடை வார்ந்து
வாய்விட் டிருப்ப வளைநிமிர் சுட்டது
நட்டடிக் கணையை நச்சுதல் நீர்ப்புள்.

## சிற்றுளி

### 286

நட்டணி நடுக்கண் விட்டுகிர் நட்டு
மற்றவை மேல்வளை மரபே சிற்றுளி.

## வண்டு

### 287

அணிவிரற் பெருவிர லுகிர்நுனி யணையச்
சிறுவிரல் நிமிர மறுவிரல் குனியப்
பெறுவது வண்டின் பெட்சியென் மனரே.

## ஞெண்டு

### 288

ஞெண்டே ஞெண்டை முழந்தாட் சிலம்பே.

## கவிக்கிள்

### 289

ஞெண்டுச் சுட்டது விட்டுகி ரொட்டிக்
கவிப்புற லேகவிக கிள்ளெனக் கழறு.

### 290

கவிக்கிள் கவிக்கிள் கற்புரங் காட்டல்
தாளம் பிடிததல் கழுநீர்த் காதணி
பாப்புறப் பால்கறந் திடற்பா லாவி
மலர்க்கிள் கனிக்கிள் மத்திட லெனப.

## கிள்

### 291

சுட்டுப் பெருவிர லுகிர்நுனி யொட்டல்
மற்றவை தழைவொடு வளைதல் கிள்ளே.

### கூனைக

### 292

பெருவிரல் சுட்டின் நுனிநுனி யொன்றி
இருசிறை யிணைங்கி யங்கையி லிறங்க
மறுவிரல் நீண்டும் சாய்ந்தே யட்டல்
கூனையே தேவாங் கெனவுங் கூறுப.

### பன்றி

### 293

விட்க நேராய் விரிய மற்றவை
அதனைச் சூழ்ந்தே யகற்றல் பன்றி.

### வராகம்

### 294

பன்றியின் சுட்டது வெட்டிமே லெக்க
ஒருகோட் டுறுவரா கம்மென் றுரைப்ப.

### 295

ஒருகோட் டுறுவரா கம்மாற் குரித்தே.

### முகுளம்

### 296

பன்றியின் விட்டிற் பரவிய விரல்கள்
குஞ்சித் ததன்மேற் குவிதல் முகுளம்.

### 297

முகுளம் முகுளம் மொட்டலர் மொக்கணி
மரையின் மொகுளே மறிவா யுணவே
நிறைநே ரைந்தே நிதநோர்க் குண்டலி
நெஞ்சு நேர்மலா நிறையிருங் காமம்
சிரநேர்ச் சிவையே சிகைமேற் சிவமே
கூட்டமே குழுவே குலமே கொத்தே
ஈசனே மலரிட் டிறைஞ்சலே யென்ப.

## மொக்கணி

### 298

முகாது கூம்பல் மொக்கணி யென்ப.

## முளை

### 299

மொக்கணி விட்டுகிர் மூப்பது முளையே.

## நாண்

### 300

முளையிலே நட்டு முளைப்பது நாணே.

## நாணிலை

### 301

நாணிலே கட்டு நாட்டணை நாணிலை.

## தேங்காய்

### 302

மொக்கணிப் புறங்கை முறுக்கல் தேங்காய்.

## மல்லி

### 303

முகுளம் விட்டுகிர் மொட்டுதல் மல்லி.

## முகுடம்

### 304

முகுளப் பெருவிர லங்கையில் முன்ன
கட்டும் நட்டு மதன்மேற் கவிய
சுட்டும் சிட்டும் அதன்மேல் தோயக்
கட்டுங் கையே காண்முகு டம்மே.

### 305

முகுளத் திறைவிரி முகுடமு மாமே.

### 306

காப்பே கழுத்தே கக்கமே கதிரே
கடகமே படகமே கணையணி மகரமே
மொட்டின் முதிர்ப்பே முனைப்பே முகுடம்.

## முல்லை

### 307

அணியுங் கடையு மிணைந்து வெடைக்க
விட்டது சுட்டையும் நட்டையும் மடக்கி
வெடைப்பிடை யுகிர்முக மேவுதல் முல்லை.

## சம்பகம்

### 308

பன்றியமா முகத்தி லொன்றிய விரல்கள்
அகன்றுவான் நோக்க வமைவது சம்பை.

## முக்கடி

### 309

பன்றியிற் கடையணி யொன்றியுள் ளாக
மற்றவை நிற்கு மாபுமுக் கடியே.

## வில்வம்

### 310

சிட்டது நெட்டுற மற்றவை மட்டுற
விட்டுகிர் கிணையது மற்றுகிர்க் கிணையடி
ஒட்டுற வில்வமென் றுரைத்தனர் முனிவர்.

## துளசி

### 311

விலகக் கட்டதும் வீக்கல் துளசி,

## தும்பை

### 312

துளசியின் நட்டது நெட்டதைத் துணையச்
சுட்டுகிர்க் கிணைநடு விட்டுறல் தும்பை.

## கொன்னை

### 313

கவிக்கி சுட்டது புவிக்கண் நால
விட்டணை யெட்டும் விறலது கொன்னை.

## 314

கொன்றை யசோகம் குரவமே புறவம்.

### செம்பூ

## 315

மூகுளம் சாய்த்து நட்டது முன்னி
வட்டணை நடுவே வார்த்திடல் செம்பூ.

### குடம்

## 316

முகுளக் கடிக்கணை முறைமுறை விரிதல்
குடமென் றுரைத்தார் கூத்துணர்ந் தோரே.

## 317

குடமே குடமே பலவின் கனியே
பூசனி பரங்கி யாசினி யென்ப.

### குடை

## 318

குடமது கவிதல் குடையென் மனரே.

## 319

குடையே குடையே மதிக்குடை நாய்க்குடை
குவியுங் கலசக் கொழிப்பே யென்ப.

### காந்தள்

## 320

ஈரிரு விரலும் ஈரிரு பாலும்
விட்டகர்க் கவ்விக் கொட்டுறும் வகையே
மட்டலர்க் காந்தள் மொட்டென் மனரே.

## காந்தட்பேரணி

### 321

நட்டது பின்னச் சுட்டணி முன்ன
விட்டுகி ருன்னச் சிட்டுநேர் மன்னப்
பெற்றது காந்தட் பேரணி யென்ப.

## மலர்

### 322

மொக்கணி முனையா முனையது நாணு
நாணிலை நழனு நழனது முகுளா
முகுளது முகுடா முகுடுறு மலரா
அலரது மலரா வமைவது மலரே.

## பரிதிப்பூ

### 323

கடைக்கை தூக்கிக் கணைமுன் னெரித்து
மொக்கணி யைவிரல் முழுவது மகற்றி
மென்மேல் வான்வெளி வெள்ளிடை விரித்தல்
பரிதிப் பூவெனப் பகர்ந்திடு வாரே.

## மதிப்பூ

### 324

அட்டமிக் கையில் மட்டணை தளர
மெட்டுறு கணைவரி மேலுறத் தரைமுகம்
நட்டது மதிப்பூ நளினமென் பாரே.

## குறிப்பூ

### 325

சுட்டைக் கவ்வி நட்டது மீனச்
சிட்டைக் கவ்விச் சுட்டது மீன
ஒட்டி யிரண்டும் நட்டிக் காட்டல்
உதடலர் யோனிக் குறிப்பூ வுளவே.

## கலவி

### 326

குறிப்பூ விடையே வெறிப்பூ ணுக
விட்டது கொட்டற் கலவியின் வீறே.

## வாழை

### 327

கடைக்கை தூக்கிக் கணைக்கை நெரித்துப்
பெருவிரல் நிறுத்து மறுவிரல் வரியில்
வார்த்து நிற்பது மடல்தாழ் வாழை.

## வாழைப்பூ

### 328

வாழைக் கையி லைவிரல் தாழும்
சுடழை கூம்பே வாழைப் பூவே.

## வாழைக் குருத்து

### 329

நட்டது நட்ட மற்றவை விட்டில்
மொட்டிடல் கதலிக் குருத்தென மொழிப.

## வாழைக்கனி

### 330

மீன வெடைப்பில் நட்டதும் மேவி
ஒட்டி நிரப்பல் ஒண்கனி வாழை.

## தாழை மடல்

### 331

விட்டது நடுக்கண் விரிசிறை நிற்ப
மற்றவை முன்முறு வரியினே ரோங்கி
மடலென மடத்தல் தாழைமா மடலே.

## வெண்டாமரை

### 332

மலர்க்கையிற் சிட்டதும் விட்டதும் நேரல்
கலைக்கைத் தேவியின கமலமே யென்ப.

## செந்தாமரை

### 333

இன்னணங் கட்டதும் விட்டது மெதிரல்
செந்திருப் பொன்னின் செந்தா மரையே.

## நீலத்தாமரை

334

இங்ஙனம் நட்டதும் விட்டதும் எதிரே
நிறையம் பிகையின் நீலத் தாமரை

## காக்கணம்

335

இங்ஙனம் விட்டதுஞ் சுட்டது மெதிர
மட்டது மேன்மேல் வரைந்திடற் கரிய
கானித் தாய்க்குழைக் காக்கண மலரே.

## மலர்க்கை

336

விட்டுஞ் சுட்டும் விட்டுமே நிமிர
மற்றவை நடுவண் கிட்டுற வணைதல்
மலரினை ஏந்தும் மலர்க்கை யென்ப.

## மாலை

337

மலர்க்கை வட்டணை விரல்கள் மறிந்தே
ஒன் றுபின் னென்ற யுருள்மல ரொட்டி
மாலையாத் தழைதல் மலர்த்தா ரென்ப.

## மாடு

338

மரன்தலைக் கட்டும் நட்டும் மறியா
நட்டுநேர் விட்டுமேல் மட்டுறல் மாடே.

## மேதி

339

மாட்டுறு சுட்டுஞ சிட்டுமே யணையில்
வீக்கி வெடைத்தல் மேதியே யென்ப.

## பரிக்கை

340

மாட்டுறு மட்டவை நீட்டியே விரியக்
கோட்டுறு மற்றவை கோணிமேற் கூப்ப
விசைப்பரி யென்ன விளம்பின ராமே,

## மூசிகம்

### 341

சிட்டது நிமிர மற்றவை மட்ட
விட்டது சுட்டணை யொட்டல்மூ சிகமே.

## மாற்புள்

### 342

மூசிக நிமிர்வின் முறையிற் சிட்டணை
விட்டணை நிமிர்ந்து வீக்குதல் மாற்புள்.

### 343

மாற்புள் கருடே வானப் பரியே
ஐந்திரன் கரியே அன்னையி ஞழி
சக்கர வாசத் தாம்பென் மனரே.

## ஒட்டகம்

### 344

நட்டும் கட்டும் விட்டின் நடுவே
கொட்டிமேற் கூம்ப மற்றவை மட்டி
விட்டுமே லிணைய மெட்டலொட் டகமே.

## கரிக்கை

### 345

மாற்புள் மூவிரல் மடியச் சிட்டும்
விட்டு மண்ணையி லொட்டி வெடைக்க
நட்டது நான்று நலுக்கல் கரிக்கை.

## கரிக்கொம்பு

### 346

சிகரம் கணைமுகம் சிட்டதும் நெட்டல்
கரிக்கொம் பென்னக் காட்டினர் முன்னோர்.

## முதலை

### 347

சுட்டும் சுட்டும் சிட்டு மடங்க
விட்டும் நட்டு நெட்டி விறுங்கத்
தூக்கிக் காட்டும் துலையே முதலை.

## நாய் முகம்

### 348

முதலே முகத்து முன்னிய விட்டில்
நடுவிரற் சுடுவிரற் கடைமு மொட்டி
இடைக்கணே வீக்கலே நாய்முக மெனப.

## முயல்

### 349

நடுவ ணிரண்டும் பெருவிரல் நடுப
அக்கடை முகமே லணைந்திட மற்றவை
நெட்டுதல் முயலின் நெறியென் மனரே.

## அணில்

### 350

மூவிரல் குழித்து நீவுத லணிலே.

## இளம்பிறை

### 351

கடைக்கணு மேலே விரலகங் குழைய
விடுவிரல் தழைய வின்னிளம் பிறையே.

## சிலந்தி

### 352

அங்கைத் தட்டினி லேவிர லகற்றி
மடங்கி முடங்கி வெடங்கல் சிலந்தி.

## மீக்கிளி

### 353

கிளிமுக விட்டது மட்டினை யொட்டல்
மீக்கிளி முகமாத் தூக்கினர் முனிவர்.

### 354

இக்கிளி முகந்தா னிறைவர்க் கென்ப.

## கிளிக்களி

### 355

கிளிமுக நட்டது சீக்கியே நிமிர
அளிமுகக் கிளிக்களி யார்ப்பெனர் முனிவர்.
இக்கிளி முகந்தா னிறைவிக் கென்ப.

## சிம்புளி

### 356

விட்டுஞ் சுட்டும் வீக்கியே வீச
நட்டணை மூவிரல் நட்டுமே கீக்கல்
சிம்புளி யென்னச் செப்பிடு வாரே.

## களிப்பூ

### 357

சிம்புளிச் சுட்டது நட்டவை யொட்ட
நட்டது வீக்கல் நாடக் களிப்பூ.

## சொற்கோல்

### 358

சிம்புளி நட்டணை மொட்டுதற் சொற்கோல்.

## புறவு

### 359

கோப்பின் மூவிரல் நெட்டுற விட்டணைச்
சிட்டது நட்டுறு சிறையே புறவு.

## கரிப்புள்

### 360

சிம்புளி நெட்டணை யங்கையி லொட்ட
வீக்கிய விட்டுகிர் கணைமடி கொள்ள
கைமறித் திட்ட கணையே கரிப்புள்.

## செம்புள்

### 361

நட்டுஞ் சிட்டும் விட்டுற விரியில்
ஒட்ட மடங்க மற்றவை முன்பின்
வீக்கி வெடைப்ப விட்டகங் காட்டல்
செம்புட் சிகரச் சிறப்பென் மனரே.

## அஞ்சிலிப்புள்

362

சிறுவிரல் நெடுகப் பெருவிரல் முடுகி
அடிக்கணை யடக்கி யப்பால் நூக்க
மறுவிரல் தூக்கி யஃகான் மறிதல்
அஞ்சிலிப் புள்ளென் றறிந்திசி னோரே.

## இருதலைப்புள்

363

கத்தரி கையிற் சுடுவிரல் நடுவே
விட்டுகிர் கெட்ட லிருதலைப் புள்ளே.

## அன்றில்

364

பெருவிரற் சுடுவிரற் கடைவரி கவ்வ
மறுவிர லொட்டியுள் நெட்டலே யன்றில்.

## வலை

365

கடையுஞ் சுட்டும் கடைக்கடைக் கவ்வி
நட்டணி யகன்ற நெட்டிலே மறிய
விட்டுட் புகுதல் மீன்வலை யென்ப.

## வேல்

366

சுட்டும் சிட்டும் விட்ட ணை யுள்ளா
விட்டவை நிமிரல் வேலன் கைவேல்.

## மூவிலை

367

செம்புட் கையின் மூவிரல் நேர்நேர்
விரிதல் மூவிலை விறலே யென்ப.

## நீறு

368

மூவிலை யொட்டிக் கீற்றிடல் நீறே.

முக்கோல்

369

மூவிலை நெட்டிக் கீற்றிடல் முக்கோல்.

அருள் நீர்

370

கோப்பது குழியச் சுட்டுமேல் வார
கோப்பது குருவருட் குடிநீர் கொளலே.

பிண்டி

371

கடைக்கைக் கணைமேற் புறக்கை கவிய
ஒட்டுநால் விரலும் ஊக்கியே நிமிர
வேர்க்கணை வரியில் விட்டுமட் டாட
நேர்ப்பது பிண்டியின் நெறியென் மனரே.

பீடு

372

பெருவிர லணிச்சிறு விரல்நுனி யணைய
மறுவிர லோங்கி வகிர்தலே பீடு.

373

பீடே பிடியே பெருமையே பெண்ணே
தெய்வப் படையே தெளிவே யென்ப.

பேடு

374

பிடிணை மாற்றல் பேடென் மனரே.

---

375

பேடே பேடே பிழையே பீழே
துளையே துவளே தொக்கே மளையே.

துடி

376

கடைகடை நீள நடுவணி விட்டின்
கட்டினி லட்டக் கணத்தல் துடியே.

## தட்டு

### 377

கோப்புறு விரல்நுனி விரல்வேர் கோப்ப
அகங்கைத் தட்டுறு மதுவே தட்டு.

## வாலணி

### 378

தட்டில் நட்டது மட்டுமே நெட்டல்
வாலணி வட்டலி வட்டெடன் மனரே.

## திருப்பி

### 379

இன்னணம் சுட்டது நெட்டல் திருப்பி.

## அகப்பை

### 380

வாலணி தட்டுட் குழித லகப்பை.

## நிலைத்தூண்

### 381

தட்டிற் சுட்டதும் விட்டதும் நட்டல்
நிலைத்தூ ணென்ன நிருமித் தனரே.

## மண்டபம்

### 382

இருநிலைத் தூணளை யிணைமண் டபமே.

## எழுநிலை மாடம்

### 383

ஒருதூண் மேற்படி மறுதூ ணேச்ச
வருநிலை யெழுநிலை மாட்டென் மனரே.

## முகடு

### 384

விட்டுஞ் சுட்டு மட்டணை குவிய
மற்றவை நெட்டல் முகடாம் வளமே.

385

முகடே முகடே முனைப்பே முழுதே
கோடே யாம்பிக் குடையே முதுமை.

அகடு

386

முகட்டைக் கீழுற முடைவதே யகடு

387

அகடே அகடே முதலே யடியே.

கப்பல்

388

அகடுமு விரலவை யகல்வது கலமே.

பவளச்சுரிகை

389

பெருவிரற் சிறுவிர லுகிர் நுனி பிணைய
நட்டணி யணைய ணையவுஞ் சுட்டு
நெட்டது பவளச் சுரிகையா நேடு.

வலம்புரி

390

சங்குப் பெருவிரல் அங்கைநேர் வீங்கச்
சிறுவிரல் மொட்ட மறுவிரல் மென்மேல்
தழையச் சுடுகடை தட்டதுள் நிமிரும்
வரிவரி வார்ப்பே வலம்புரி யென்ப.

கோடரி

391

சுட்டது நட்டு விட்டுநேர் வீக்கி
மற்றவை நெட்ட வகையே கோடரி.

புலிநகத்தாலி

392

நடுநால் விரலுட் பெருவிரல் நடுவே
மற்ற திருசிறை மடங்கி வயங்கத்
தரையுறக் காட்டல் புலிநகத் தாலி.

## ஐம்படை

### 393

நடுநால் விரல்நடு விடுநால் விரலுறத்
தொடுநால் நேர்முகம் தோற்றுத லைம்படை.

## பாக்கரி

### 394

சுட்டது முன்னி விட்டுகி ருன்னி
மற்றது மடியக் கொட்டுதல் பாக்கரி.

## வெளி மயக்கு

### 395

ஐவிர லகங்கை யரவுமே விரித்து
வேர்க்கணை வெடைத்து வெறித்தகம் புறமாய்
மாற்றுதல் வெறுவெளி மயக்கே யென்ப.

## நோனை

### 396

சிகரக் கையினிற் சேர்விரல் வரிநிமிர்ந்
தகரம்விட் டிடைந்தகம் அணைந்திடத் தழைந்து
சிகரவிட் டடியினில் தகரகட் டுறுதல்
நோனையா தெனுநெறி நிகரமரங் கையே.

### 397

நோனையே நோனை நீர்ச்சுழிக் கொப்பூழ்
வானையே கிணறே வட்டிலே யென்ப.

## உன்னம்

### 398

ஐவிர லடிக்கணை யகன்றுபின் வெடைக்க
மறுகணை யலைவமேல் வரிவரி விடைக்க
ஒட்டுநெட் டுறுவதே உன்னமா மென்ப.

### 399

உன்னமே யுன்னம் உணையே ஞணையே
உறைபனி நளிரே ஒக்கலே நெக்கல்
வக்கலே விக்கே நெக்கலே நெக்கே
வலிப்பே குட்டமே குறிப்பே பேயே
புலியே முகவால் புனைக்கே மினைக்கே.

### ஒன்று

**400**

சுட்டது நெட்ட மற்றவை மட்ட
விட்டது மட்டினை யொட்டியே கட்ட
ஒன்றெனக் கொண்டார் உணர்ந்திசி னோரே.

### இரண்டு

**401**

இன்னண மிருவிரற் கியைவ திரண்டே.

### மூன்று

**402**

மூவிரற் கியைவது மூன்றென மொழிப.

### நான்கு

**403**

நால்விரல் மடிய மேல்விரல் வீக்கி
நேருறக் காட்டல் நாலென நேர்ப.

### ஐந்து

**404**

முகுட விட்டணை முன்னுத லைந்தே.

### ஆறு

**405**

முன்வணம் சிட்டுற முன்னுவ தாறே.

### ஏழு

**406**

சிட்டும் கட்டும் சேர்ந்திட லேழே.

### எட்டு

**407**

அதனுடன் நட்டுமா யமைவதே எட்டு.

## ஒன்பது

### 408

நெட்டுநால் விரலும் விட்டக முறலும்
ஒன்பதா மென்ன உரைத்தனர் புலவர்.

## பத்து

### 409

காப்பின் விட்டது கலந்தனை யொட்டி
மீப்புறு கணையை வீப்புதல் பத்தே.

### 410

இருகைக் காப்பு மிணைவதும் பத்தே.

## எலுமிச்சை

### 411

புறங்கை விரலுறப் புவிமுக மாகச்
சிட்டுகிர் விட்டுகிர் ஒட்டுற விட்டனை
காமெலு மிச்சையின் கனியென் மனரே.

## கொளுமிச்சை

### 412

கட்டும் விட்டும் காண்கொளு மிச்சை.

## மாங்கனி

### 413

நட்டுவிட் டொட்டி மொட்டுதல் மாவே.

## வாழைக்கொத்து

### 414

கதலியின் கொத்தைக் காட்டுங் காலை
குறிப்பூக் கொழிப்பவை குறுக்கே மறிந்து
விட்டுசுட் டொட்டும் கணைமுக வீககே.

## பலா

### 415

சிட்டுநட் டொட்டிச் சீறி வெடைக்க
சுட்டுகட் டெட்டி யிருபுறஞ் சூழச்
சடைப்பது விட்டது சார்ந்துசார்ந் தெட்டி
வெடைப்பது பலவின் விழுக்கனி யென்ப.

## முக்கனி

416

சுட்டுவிட் டொட்டிய மாங்கனி தூங்கச்
சிறுநடங் கதலியின் சேர்ப்பினின் வீங்க
அணியதன் பாற்குழைந் தார்பலாத் தூங்கக்
கையகங் காட்டும் கற்பனை முக்கனி.

## முக்கனிச்சாறு

417

விட்டுகிர் சுட்டுகி ரொட்டிய வட்டில்
உட்குழி மறுவிர லொட்டிய சரிவை
முன்னுறக் காட்டல் முக்கனி கொளலே.

## வெங்காயம்

418

புறங்கை யதன்மேல் விரல்விரி முகுளம்
விடுநுனி சூழ்தல் வெங்கா யம்மே.

## தேக்கனி

419

மோக்கணி கவிதல் தேக்கனி யென்ப.

## முந்திரி

420

தேக்கனி நட்டுமுன் கீக்கல்முந் திரியே.

## குடங்கை

421

முகுளம் படுத்து முடங்கல் குடங்கை.

422

குடங்கை குடமே பூசனி பரங்கி
கிண்ணங் குண்ண முண்ணமே யென்ப.

## காங்கூலம்

423

குவிமுகுள் மலரெனக் கொள்காங் கூலம்.

